2nd July 1962]

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்:** ராசிபுரம் முனிசிபல் கமிஷனருக்கு இதைப்பற்றி தகவல் அறிவிக்கப்பட்டிருக்கிறது அங்கிருந்து பதில் எதிர்பார்க்கப்படுகிறது.

**திரு. சோ. ஆறுமுகம்:** பனைமரத்துப்பட்டித் தண்ணீரை ராசிபுரத்திற்குக் கொண்டுபோகவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அங்கேயுள்ள விவசாயிகள் அந்தத் தண்ணீரைப் பயன்படுத்த வேண்டாமென்று சொல்லியிருக்கிறார்களா ?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம்:** அதைப்பற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

*University colleges (opening)*

* 86 *Q.*—SRI K. MOOKIAH THEVAR: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any proposal from the University for the establishment of Uuniversity Colleges in the State; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**தீ விபத்துக்கள்**

* 86-பி. கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60, 1960-61, 1961-62 ஆண்டுகளில் திருச்சி மாவட்டத்திலுள்ள பெரம்பலூர், முசிரி தாலுகாக்களில் எத்தனை தீ விபத்துக்கள் ஏற்பட்டன ?

(இ) பெரம்பலூரிலாவது துறையூரிலாவது ஒரு தீயணைக்கும் படை வைக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*)—

| | 1959-60. | 1960-61. | 1961-62. |
|---|---|---|---|
| Perambalur taluk .. | 8 | 12 | 12 |
| Musiri taluk .. .. | 9 | 12 | 14 |

(*b*) No, Sir.

**திரு. து. ப. அழகமுத்து:** பெரம்பலூர் தாலுகாவிலும் முசிரி தாலுகாவிலும் அடிக்கடி தீ விபத்துக்கள் ஏற்படுகின்றன. திருச்சி ஜில்லாவில் காவேரிக்குத் தெற்கேதான் தீயணைக்கும் படை வைக்கப்பட்டிருக்கிறது. தீ விபத்துக்கள் ஏற்படும் பொழுது, வெகு தூரத்திலிருந்து இந்தப் படை வரவேண்டியிருப்பதால், தீ அணைப்பதற்கு முடியாமல் போகிறது. ஆகவே காவேரிக்கு வடக்கேயும் ஒரு தீ அணைக்கும் படையை நிறுவ அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : இப்பொழுது தீயணைக்கும் படை முனிசிபல் எல்லைகளில் அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கு ஜனத்தொகை அதிகம். அதுவும் இன்னும் சில முனிசிபல் எல்லைகளிலே அமைக்கப்படவில்லை. முதலிலே எல்லா முனிஸிபல் எல்லைகளிலும் இதை அமைத்துவிட்டுத்தான், கிராமப்புறங்களிலே உள்ள எல்லைகளில் அமைக்கப்படுவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்.

9.00 a.m. **திரு. மீ. கல்யாணசுந்தரம்** : பெரம்பலூர் தாலூகாவில் அடிக்கடி தீ விபத்துக்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. அதனால் காவிரி நதியின் வட புறத்தில் தனியாக தீ அணைக்கும் படை ஒன்றை நிறுவ வேண்டும் என்று திருச்சி மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் தீர்மானம் போட்டு அதை இந்த அரசாங்கத்திற்கு அனுப்பியும் இருக்கிறார்கள். அதைப்பற்றி இந்த அரசாங்கம் பரிசீலித்துக்கொண்டிருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : அபிவிருத்தி கவுன்சில் எத்தனையோ தீர்மானங்கள் போட்டு அனுப்பிக்கொண்டுதான் இருக்கின்றன. அவைகள் எல்லாவற்றையும் பரிசீலனை செய்வது என்பது முடியாத காரியம். எந்தத் தீர்மானங்களின்மீது விசேஷ கவனம் செலுத்த வேண்டுமோ அவைகளின்மீது அவ்வப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. அப்படி தீர்மானங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து பரிசீலித்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு தான் வருகிறது.

*86-சி கேள்வி.—**திரு. ஆ. தங்கவேலு** : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

*(அ) 1959, 1960, 1961-ல் திண்டிவனம் நகரத்திலும், வட்டத்திலும் எத்தனை தீ விபத்துக்கள் ஏற்பட்டன?*

*(இ) திண்டிவனம் நகரத்தில் தீ அணைக்கும் படை நிறுவ உத்தேசமுண்டா?*

*(உ) அப்படியானால், எப்போது நிறுவப்படும்?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*)—

| | | | | | Tindivanam town. | Tindivanam rural area. |
|---|---|---|---|---|---|---|
| **1959** | .. | .. | .. | .. | 2 | 16 |
| **1960** | .. | .. | .. | .. | 4 | 15 |
| **1961** | .. | .. | .. | .. | .. | 9 |

(*b*) Yes, Sir.

(*c*) Under the scheme of financial assistance to State Governments for improving fire services in the country initiated by the Government of India, a grant to the extent of Rs. 2,03,000 has been applied for for the year 1962–63 to meet the cost of four fire engines and other equipments. Two of these fire engines are proposed to be utilised for opening of a Fire Station at Tindivanam.

Action will be taken to open a Fire Station as soon as the grant is received.